# SONGS

ON

# SRI PARAMAHAMSA SACHITHANANTHA YOGEESWARAR.

*Compiled by*

**VELAYUDA SWAMY.**

---



PRINTED AT

SOLDEN & CO., MADRAS,

25th November 1922.

 [Price 0—4—0.

# லலிதா.

மிகவும் அற்புதமான செந்தமிழ்நாடகம்.

இது,

எஸ். இராமய்யங்கார், பி. ஏ., பி. எல்., சென்னை

அவர்களால் இயற்றப்பட்டது.

இந்த லலிதாநாடகம் வடமொழியிலுள்ள சாகுந்தலம் போலவும் ஷேக்ஸ்பியர் மஹாகவியின் நாடகங்களைப்போல வும் ஒவ்வொருவர் மனதை கவரத்தக்கது. இது படிப்பத ளுல் ஒவ்வொருவரின் புத்தி மிகவும் கூர்மையுண்டாய் சிற் றின்பத்தில் சிலதுநாள் இருக்கச்செய்து பிறகு பேரின்பம் அனுபவிக்கச்செய்யும். சிற்றின்பம் அனுபவிக்காத பிரம்ம சாரி பேரின்பம் அடையமாட்டான். பிரம்மசாரியாயிருக் கப்பட்டவன் பிரம்ம ஞானமடைய வேண்டுமென்று சந்நி யாசம்பெற்று எவ்வளவுவைராக்கியத்துடன் இருந்தபோதி லும் அவனுக்கு எவ்வனம் வந்தவுடன் காமம் அதிகரித்து ஸ்திரீ லோலனுய் இரண்டிற்கு பிரஷ்டனுய்விடுவான். ஆத லால் முதலில் சிற்றின்பம் அனுபவித்துப் பிறகு பேரின்பம் அடைய இந்த லலிதா நாடகமே மிகவும் சிரேஷ்டமானது. இந்த லலிதாகதை வாசிக்கவேண்டுமென்று எண்ணங் கொண்ட புருஷர்களாகிலும் ஸ்திரீகளாகிலும் இக்கதை புத்தகம் கையில் எடுத்து வாசித்துக்கொண்டே போகும் பொழுது அதைநிறுத்தி போஜனத்திற்குப்போக மனம் வராமல் படித்து முடித்த பிரகு போஜனத்திற்கு எழுந்திருக்க லாமென்று எண்ணம் வுண்டாகும். இந்த லலிதாவை சுகுமாரன் மணம்புரிய எண்ணங்கொண்டு அவன்மனம் அவள் மீது எவ்விதமாய் ஆழ்ந்துநின்றதோ (அது, இக் கதை 25-வதுபக்கம் கடைசி 5-வதுவரியில் இருக்கின்றது.) அதுபோல் ஈசுவரபக்தியில் மனம் ஆழ்ந்து நிற்கவேண்டும். ஆதலால் லலிதாகதை வாங்கி வாசியுங்கள். விலை. 0-10-0.

*Apply :—*

**A. RAJAGOPAL & CO.,**

**Perambur Barracks, Madras.**

19 REGISTERED 18

தத் ஸத்

பர்ப்ரஹ்மணே நமஃ.

கடப்பை ஸ்ரீ பரம்ஹம்ஸ சச்சிதாநந்த

யோகீஸ்வரர்

மீதுபாடிய,

# சச்சிதாநந்தத் தமிழ்ப்பாமாலை.

இது,

சேலம் ஜில்லா இராசிபுரம் தாலூக்கா தொ. ஜேடர்பாளையம்

ஆர்மோனியம்

மாதுரியச் சந்தச் செந்தமிழ்

வேலாயுதசாமி யவர்களால்

இயற்றி,

சென்னை

ஸோல்டன் அச்சியந்திரசாலையில்,

பதிப்பிக்கப்பெற்றது.

---

25—11—1922.



[விலை அணு 4.

# முக்கிய கவனிப்பு.

பினங் சிங்கப்பூர் வெளி ஆர்டர்களுக்கு, வி. பி. இருந்தபோதி லும் சிலதுகை (ரூபா) முன் அட்வான்சாய் அனுப்பப்பட்டவர் களுக்குமாத்திரம் புஸ்தகங்கள் அனுப்பப்படும். ரூ. அ.

அனேக ஆப்டோன் பிளாக் படங்களுடன்கூடிய ஜீவப் பிரம்மைக்ய வேதாந்த ரஹஸ்யம் ஆறும் பதிப்பு உயர்ந்த காலிகோ பயிண்டு விலை. ... ... 2 14

இது, இங்கிலீஷ் பாஷையில் அச்சாய்க்கொண்டு வருகின்றது, வேண்டுபவர்கள் விலாசம் தெரிவித்தால் பெயர் ரிஜிஸ்ட்டர்செய்து வெளிவந்தவுடன் தெரிவிக்கப் படும்.

ஸ்ரீகிருஷ்ணார்ஜுந சம்வாதரூபமாய் எழுதிய ஸ்ரீ பகவத் கீதை இரண்டாம் பதிப்பு காலிகோ பயிண்டு விலை. ... 2 0

ஸ்ரீ கபீர்தாஸ் சரித்திரம் காலிகோ பயிண்டு விலை. ... 2 4

ஸ்ரீ பரமஹம்ஸ ஸச்சிதானந்த யோகீஸ்வரர் பூர்வ ஜன்ம இச்ஜன்ம சரித்திரம் விலை. ... ... 0 6

இது, 5 அல்லது 10 புஸ்தகங்களுக்குக் குறையாமல் வாங்கினால், வி. பி. சார்ஜ்ஜு அதிகமாய்க் கூடிவரும்.

ஸச்சிதானந்தத் தமிழ்ப் பாமாலை இது வேதாந்த விஷய மான அனேக வர்ணமெட்டுகளுடன் பாடியது விலை... 0 4

பூஜை அறைக்குவேண்டிய உயர்ந்த பரிமளமுள்ள $1\frac{1}{4}$ மணிநேரம் எரியும் ஊதுவத்தி 100-க்கு விலை, ... 2 0

கந்தககல்பம் ஒருமண்டலத்தௌஷதம். ... 10 0

இவைகள்யாவும்,

A. இராஜகோபால் அண்டு கோ.,
107-ஸ்டிராஹன்ஸ் ரோட்டு,
சூளைப்பட்டாளம்,
பெரம்பூர் பாரக்ஸ் போஸ்டு, சென்னை.

இவ்விலாசத்திற்கு எழுதிப்பெறலாம்.

## சுவாமிகள் வரவேற்பு.

திருவே வருக திரம்பொலிந்த
　　சிவமேவருக செழுஞ்சுடரின்
உருவேவருக உண்மைநிலை
　　உயர்வேவருக உலகமதின்
கருவேவருக கருதுதவக்
　　கனியேவருக காரணசற்
குருவேவருக குறையகற்றுங்
　　குணமேவருக வருகவே. (1)

மறையேவருக மாதவத்தின்
　　மலையேவருக வளர்யோகத்
துறையேவருக தொலைவறுநற்
　　சுகமேவருக தொண்டர்மன
நிறையேவருக நிர்மலநன்
　　நிலையேவருக நிகிலமதற்
கிறையேவருக வெம்முளத்தின்
　　இனிவேவருக வருகவே. (2)

பொருளே பொறியே புகன்றிடுநற்
　　புகழே பொலிவே புயலெனச்செய்
அருளே அளியே அசைவுதவிர்
　　அறிவே அழலே அருவுருவே
இருளேயொளியே யிலதுளதென்
　　றிசைக்காப்பொருளே இடரகற்றும்
தெருளேசெல்வச் சிவம்வருகத்
　　தேனேவருக வருகவே. (3)

திகழுமகண்டபரிபூர்ணத்
　　தேஜோன்மய சச்சிதாநந்த

புகழுநிகில நிராங்கார
புண்யபரம நிஷ்களங்க
நிகழுமரிய பரப்ரம்ம
நித்யானந்த நிராதார
மகிழுமழியாப் பொருள்வருக
மதியேவருக வருகவே. (4)

அடியார் வேண்டுகோள்.

உண்மைநிலையை அறியாமல்
உழலுமடியேம் உணர்ந்திடவே
வண்மைமொழி மந்திரமொன்றும்
மலர்வாய்த்திறந்து வழுத்திடுவீர்
திண்மைப்பொருளைத் தெரிந்தபசுந்
தேனேதிகட்டாத் தெள்ளமுதே
தண்மைப்பொழில்சூழ் கடப்பைநகர்
தனில்வீற்றிருக்கும் தவக்கொழுந்தே (5)
மதத்தைத்தவிர்த்து மலமொழித்து
மயலைக்கெடுத்து மனநிறுத்தும்
விதத்தையுணர்த்தி விளங்குகின்ற
மெஞ்ஞானப் பேரின்பநல்ல
முதத்தையருத்திப் பிறப்பாழி
முழுகா தருளுமுளரியஞ்செம்
பதத்தைமனத்தில் நிலைநிறுத்திப்
பணிந்தோம்சிரத்தி லணிந்தோமே. (6)
புன்சொல் எனினும் புகலுமிவையெல்லாம்
இன்சொல் எனமனதில் எண்ணியே—நன்சொல்
திருவாய் மலர்ந்தருள்வீர் சேவித்தேன் பாதம்
குருவாய்ச் சிரமீதில் கொண்டு.

---

# சச்சிதாநந்தத் தமிழ்ப்பாமாலை.

## 1. விநாயகர்துதி-வெண்பா

மலையின் வளமாற்றின் மாவள மல்கும்
தலமாங் கடப்பைத் தனில்வாழ்—நலமாம்
சிவயோகர் மீதினில் செப்பப்பா மாலைத்
தவயானை தாளே சரண்.

2. நாட்டை] பல்லவி. ஆதி

மூலாதாரா நாத
சீலாசாரா நீதனே
அநேகனே பெரு
முதுமறை யதுமறை (மூ)

அநுபல்லவி.

ஆலாகாராதிபன் பாலாபக்தருக்கனு
கூலாவிநாயகவென்
குற்ற முற்று மற்று வற்ற வரமளி (மூ)

சரணம்.

மாலாவாராசிக்கும் மேலாகியமருகா
வேலாயுதனுக்கருள்
மிக்க நற்க விக்க லக்க மறவினி (மூ)

## 3. சற்குரு ஸ்துதி விருத்தம்.

வேதமுழுதுணர்ந்தானை வித்தகநன்மனத்தானை
வீட்டை நல்கும்
போதமருள்செயும்ஜீவ ப்ரம்மைக்ய வேதாந்தம்
புகன்றிட்டானை
ஆதவனைத்தொடுமாட நிறைகடப்பைநகரிலெழுந்
தருளுவோனை
வாதனை செப்பிறவியினி வாராமலிருக்கநிதம்
வணங்குவோமே.

---

## 4. (சித்திரக்கட்டிலிலேறி)

சிந்துபைரவி] பல்லவி. ரூபகம்.

சச்சிதாநந்தர் போற்பாதம் தினம்
தவறாமலே போற்றிப் பாடுவோம் சங்கீதம் (ச)

அநுபல்லவிச்சந்தம்.

தரமலிந்த திருவமர்ந்த
வரமலிந்த பரமஹம்ஸ (ச)
தடப்புனல்கள் மடைப்பெருகும்
இடப்பழன கடப்பை வளர் (ச)
தகுந்து விரும்பி வணங்க
மிகுந்த வரங்கள் வழங்கு (ச)
சந்தம்பெருகு மந்தந்திகழும்
பந்தந்தொலைய சொந்தந்தருகும்
தப்பாமலட்டதிக்கும்
எப்போதுமெச்சலுற்ற
மெய்ப்போதமுற்றசுத்த
சாதனங்க ளேமிகுந்து யோகமென்ற

நீதமென்று மேபுரிந்து மேவுகின்ற
சந்தேக னொந்தேக வந்தேக ருணைபுரிகிற (ச)

சரணம்.

கச்சிதனில்ஜன்மம் கண்டிட்டவாமி
கருதும்ப்ராணுயாமம் கைக்கொண்டநேமி
மெச்சிடுஞ்சந்த வேலாயுதசாமி
விரும் பிடும் பதந் தரும்
பெருந் திரம் பொருந் திடும் (ச)

---

## 5. கனகசபாபதி தெரிசனம்என்ற வர்னமெட்டு.

தன்யாஸ்] பல்லவி. ஆதி

பரமஹம்ஸசச்சிதாநந்த யோகப்
பண்ணவர் பதந் துணையே (ப)

அநுபல்லவி.

வாமருள்யோக மார்க்காநுபோக
பிரமவிவேக பேரொளிதேக (ப)

சரணங்கள்.

சஞ்சிதவினைகளைத் தவிர்த்தினிதாக்கும்
சர்கரமென்றசமு சாரத்தைப்போக்கும்
தஞ்சமென்றடைந்தவர் தமக்கருள்தேக்கும்
சலனமிகுமனத்தின் சந்தேகம்நீக்கும் (ப)
ஆரணமதின்முடி வாய்விளையாடும்
அகிலசராசரங்கள் அனைத்துமாய்நீடும்
காரணசற்குருவாய் கதியினைத்தேடும்
காணுமடியவர்கள் கருத்தில்கொண்டாடும் (ப)
மாயையென்றிடும்பெரு வல்லிருள்மாற்றும்
மயலினையொழித்திட மந்திரஞ்சாற்றும்

ஆயுமறையுங்காண வரிதெனத்தோற்றும்
அடியவர்க்கடியன்வே லாயுதன்போற்றும் (ப)

---

### 6. பண்டாரதண்டாயுதா என்றவர்னமெட்டு.

செஞ்சுருட்டி] பல்லவி. ஏகம்

பேரின்ப வானந்தநல் யோகப் பெரியவராம் (பே)

அநுபல்லவி.

ப்ரம்மநிலையை யறிந்தஞான
ஜன்மமதனில் சிறந்தமோன (பே)

சரணங்கள்.

பாரின்பமேதுறந்த பக்தியதில்சிறந்த
சீரின்மடைதிறந்த
சித்தசத்திய மெத்தநித்திய (பே)

மனநிலையைக்கண்ட வடிந்திடுமமுதுண்ட
கனதவங்கைக்கொண்ட
காரணக்குரு பூரணத்திரு (பே)

மேலாந்துதிசாற்றும் மெய்த்தமிழைக்காப்பாற்றும்
வேலாயுதன்போற்றும்
வித்தகபாக்ய சித்தவைராக்ய (பே)

---

### 7. தாதாபாய் நௌரோஜி

இந்துஸ்தான்தோடி] பல்லவி ஏகம்

பூரண வானந்த
புண்யஜனனர் கண்யமனனர் (பூ)

அநுபல்லவி.

காரணசற்குருவாம் காணும்திருவுருவாம்
கதியளித்திடு பரமபாக்ய
மதிநிறுத்திடு மதிசிலாக்ய (பூ)

மனநிலையாம்நேமம் வருகும்ப்ராணாயாமம்
வாசியடக்கி யோகமியற்றிடும்
பாசமொழித்து மோகமகற்றிடும் (பூ)
பரப்ரம்மதரிசனமே பக்குவமுற்றூர்கனமே
பத்தனென்றிடும் வேலாயுதன்
நித்தமுந்தொழும் யோகீஸ்வர (பூ)

---

## 8. பாண்டியனீன்றமீனாக்ஷி

இந்துஸ்தான்தோடி] பல்லவி. ஆதி

சித்தமே தெளிந்தசிவயோகி மெஞ்ஞானம்
செய்திடும் த்யாகி (சி)

அநுபல்லவி.

நித்தமே நிலையுணர்போகி சுந்தர
நிர்மல தேகி (சி)

தோஹையரு,

தேஜோன்மயானந்த ப்ரம்மமேதாணுய்த்
திகழ்ந்திடும் பரமஞானி
காஷாயவஸ்த்ர தர மெய்யலங்காரசுக
கருணைவளர்மிகுநிதானி

அநுபல்லவித் தொடர்.

காரணம் கண்டசன்யாசி கடப்பை
கனநகர் வாசி (சி)

தோகையரு.

பனிரண்டுவருடங்கள்வரையுமானஸபூஜை
பழகித்தெரிந்தத்யானி
தனியானபொருளீதென்று றுதியாகச்சிந்தை
தங்கும்யோகாபிமானி

அநுபல்லவித்தோடர்.

சச்சிதா நந்தயோகேசர் சதுர்வே
தாநுபோகேசர் (சி)

தோஹையரு.

பூர்வஜன்மங்கண்டு மாந்தர்களுய்யப்
புகன்றிடும் புண்யசாலி
ஆர்வமாய்ப்போற்றிடும் தொண்டருக்கருள்தனை
யளிக்குங்க்ருபாநுகூலி

அநுபல்லவித்தோடர்.

அன்பன்வே லாயுதசாமி போற்றிடும்
அந்தரியாமி (சி)

---

## 9. சுவாமி விவேகாநந்த

இந்துஸ்தான் ப்யாக்] பல்லவி ஏகம்

நிஷ்டாநுபோகாவலி நிமலநிர்விகல்ப (நி)
நிகிலபரம நிஷ்களங்க
வகிலசரண சத்யதுங்க (நி)

அநுபல்லவி.

சிஷ்டோபதேசதிரு சின்மயானந்தவுரு
திகழுங்குரு
தேசுறவேவளர் சஞ்சிதங்கொய்திட
ரேசகபூரக கும்பகஞ்செய்திடும் (நி)

தோஹையரு.

லோகோபகாரார்த்தமாயவதரித்துண்மை
நூலுணர்ந்திடுமப்யாசி
பாகூறவே ஜீவப்ரம்மைக்ய ரகசியம்
பகரும் சுயம்ப்ரகாசி

அநுபல்லவித்தொடர்.

பற்றற்றமெய்த்துறவி பக்தர்கள்கூட்டுறவி
பலன்பிறவி
படித்தவர்மலி கடப்பைநகரில்
முடித்திடுமொரு மடத்தினில்வளர் (நி)

தொகையறு.

திருநகரமர்ந்தவேகாம்பரேசுரர்வனசச்
செழும்பதத்தொண்டராகி
வருடமீராறு மானஸ பூஜை செய்துமன
மகிழுங்க்ருபா விவேகி

அநுபல்லவித்தொடர்

வாழ்ப்ரம்மசம்மந்த வளர்சச்சிதாநந்த
மனமிறந்த
வாலாயதி யானசற்குரு
வேலாயுத சாமிசொற்கருள் (நி)

10. இந்துஸ்தான்தோடி] ஏகம்

பல்லவி.

மோகநிக்கிரகம் தவ யோகவிக்கிரகம்
முக்கியநேம வேதரூப
பக்குவகாம க்ரோதலோப (மோ)

அநுபல்லவி.

தேகவபிமானம் தீர்ந்திட்டஞானம்
மதி தெளிந்தனர் அநுமானம்
மிகச் செய்தாரமிர்த பானம்
உறச் சேர்ந்தனர் பரஸ்தானம்
திரமோனம் பிரதானம் செழுந்
திருக்கடப்பையதே மிக

விருக்குநிட்டையதே உண்மை
செப்புஞ்சுருதி யுக்தியநுபவ
நுட்பந்தினமு மிக்கவறிதவ (மோ)
பரமாத்மநீதம் பகர்ந்திடும் வேதம்
பரிபக்குவமுளபோதம்
பந்த பாசமும்மலச்சேதம்
செவி படுத்தினர் தசநாதம்
அவர்பாதம் பிரசாதம் தினம்
பணிந்தன்பு பெறுவோம் சிரம்
அணிந்தின்பமுறுவோம் சந்தம்
பகருமுத்தமிழ் வேலாயுதன்
நுகருமுத்தமத் தேனுகிய (மோ)

---

## 11. மேரெதர் தேஜிவர்னிஷா

சேஞ்சுருட்டி] பல்லவி. ஆதி

மோக்ஷ ஞானோபதேசமாநாயகமே மோக்ஷ (ஞா)

அநுபல்லவி.

நாயகமே தொண்டர் தாயகமே மோக்ஷ (ஞா)

சரணங்கள்.

தானுகவேயமர்ந்த தலைமைச்சின்மயாநந்த
தேனுகிடுமினிந்த தேஜோன்மயசுகந்த (ஞா)
சர்வமயவிநோதி சச்சிதாநந்தஜோதி
நிர்விகல்பசமாதி நிஷ்டையுணர்ந்தநீதி (ஞா)
மனமெனுமாயைவிண்ட மாதவரூபங்கொண்ட
அநுபவத்தில்கைக்கண்ட அமிர்தமதனையுண்ட ()
மிக்கமதுரச்சந்த வேலாயுதன்விழைந்த
தக்கவார்த்தைத்தந்த சற்குணத்திற்சிறந்த (ஞா)

---

## 12. ஆண்டிப்பண்டாரம் பின்மகுடம்.

சுருட்டி] பல்லவி. ஏகம்

ஆத்மவிவேகி சச்சி
தாநந்தயோகி பரம (ஆ)

அநுபல்லவிச்சந்தம்.

ஆதிசிற்பர ஜோதிநற்பர (மா)
அகத்து ளிருக்கு
மிருத்த மகத்து (வா)
ஆரணந்தெரி காரணங்களு
தாரணந்தரு பூரணம்பெரும் (ஆ)

சரணங்கள்.

சாத்விகமேநிறைந்த தத்துவங்களேயறிந்த
பூத்தவருள்செறிந்த புண்யமதேமிகுந்த
தங்குஞானசாகரம் தவவிசாலசேகரம்
தரமலிந்த தருமவம்ச
வரமிகுந்த பரமஹம்ச (ஆ)

காஞ்சிதனிலேபிறந்து கடப்பைதனிலேசிறந்து
வாஞ்சைதனேயேதுறந்து மனந்தன்னேயேமறந்து
கருதுயோகநித்திரை கைகளோசின்முத்திரை
கட்டிடுங்கௌபீனமான
மட்டறுஞ்சி வாபிமான (ஆ)

பரமாத்மசம்மந்தம் பரிபூரணனந்தம்
திரமானநற்கந்தம் சிவபக்தியேசொந்தம்
பக்குவமனநேசியே பகர்ந்திடும்சந்யாசியே
பாடிடுந்தமிழ் வேலாயுதன்
நாடிடுந்திர ஞானேதய (ஆ)

---

## 13. பாலாபிஷேக.

சிந்துபைரவி] பல்லவி. சாப்பு

பரமாம்சசச்சிதா நந்தயோகீஸ்வரர்
பக்தரைக்கார்க்கப் பிறந்தவராம் (ப)

அநுபல்லவி.

திரமாகிய ஜீவப்ரம்மைக்ய வேதாந்தம்
செய்துமிகவும் சிறந்தவராம் (ப)

தோஹையரு.

பாதிமதிவேணி ஏகாம்பரேசரருளால்
படைத்தார் மெஞ்ஞானதாரம்
ஆதிகுருசங்காசார்யரென்றேபுகல
ஆனூர்திருவவதாரம்

முடுகு

பலவிடமலேகிற மனமதைக்கட்டி
நலமுடனொருநிலே பெறுமதிகெட்டி

அநுபல்லவித் தோடர்.

படுத்தும்வைராக்கிய
கிடைத்திடும் யோக்கிய
கடப்பையின் பாக்கியக் காரணனூர் (ப)

தோஹையரு.

முன்ஜனனங்க்ரிஸ்தவாகிக்கடவுளொன்றென்றே
மொழிந்துப தேசித்ததாலே
பின்ஜனனமாகுமிதில் விட்டகுறைவந்தடையப்
பெற்றூர்சிலாக்ய மேலே

முடுகு.

முதனடு முடிவறு முழுப்பொருள்மீது
நிதநிதமனமுறு நினேவுவிடாது

அநுபல்லவித்தொடர்.

முந்து நாலாவிதச்
சந்த வேலாயுதன்
மூர்த்தியென் றேத்திடும் தோத்திரனார் (ப)

---

## 14. பஹாரியாலா.

இந்துஸ்தான்தோடி] பல்லவி ஆதி

சமாதியோகதவ சாதனநிதி (ச)

அநுபல்லவி.

ப்ரமாதமானதாகும்ஜீவ ப்ரம்மைக்ய வேதாந்தம்
பேரின்பப் பாலூற்றிவைத்த பெரும்பாண்டம்
பெற்றுதந்தசாந்தம் பற்றும்சிந்தைகாந்தம் வரும்
பிறப்பெனுங்கடல் தனைக்கடந்ததி
சிறப்படைந்தொரு நினைப்பினின்றிடு
பிஞ்சக னென்றப ரந்தனில் சிந்தனை (ச)
விவேகமீறும்பதி னெண்சித்தர்மேன்மைபெற்ற
[நாயனார்
வேமன்னர் பட்டினத்தார் பத்திரகிரியார்
மிக்கக்களித்துரைத்தார்நிற்கஒளித்துவைத்தார் அதை
வெட்டவெளியுடன் மட்டிமடையரு
மிட்டபரகதி திட்டமுடனுற
விரித்து வழுத்தும் பெருத்து பழுத்த (ச)
அவாவெனும்பொல்லாதபேயை யலறியோடவோட்டி
ஆணவமுதல்மலங்கள் அறவாட்டி
அஞ்ஞானத்தைவீட்டி மெஞ்ஞானத்தைநாட்டி இசை
அந்தமிருந்திடு சந்தவேலாயுதன்

சிந்தைபுகுந்துநி றைந்தமேலாகிய
அரும கத்வ நிருவி கற்ப (ச)

---

### 15. ஆசிரியவிருத்தம்.

பந்தமெனு மக்கள்மனை வீடுதோட்டந்துறவு
பணமாகு மிதுக ளெல்லாம்
பாரினில் வரும்போது வந்ததில்லை நாளைக்குப்
பாடைமேல் போகும் போதும்
சொந்தமென வந்திடா திடையினிற் கனவுபோல்
தோன்றியே யழிவ தென்று
சுத்தமாயெண்ணுமல் நித்தமே சதமென்று
தொல்லுலகி லெண்ணிநாளும்
வந்தமட மாதினே டினிதாக வாடியே
வலிவையெல் லாமிழந்து
வாழ்நாட் கழித்துட னிறப்பதங் யாயமே
மனமஞ்சுகின்ற தையோ
சந்ததமு முந்தனொரு மந்த்ரமெனும் விந்தைமொழி
தந்தெளிதி லாண்டருளுவாய்
தடப்பொழில்கள் பலசூழ்ந்த கடப்பைவளர் பரமாம்ச
சச்சிதா நந்த குருவே.

16\. சோத்திரந் தொக்கினெடு சட்சினஞ் சிங்குவை
தோன்றுமாக் ராண மென்று
சொல்லுமைம் புலனையும் நில்லெனவடக்கியே
தொலையாத வாசை யென்ற
ஆத்திரம் விட்டுமன மென்னுங் குரங்கினை
யடக்கிப் பிடித்து வைத்தே
அந்தர்முக நாட்டம் படுத்தியே பேரின்பம்
அடைகின்ற விதமருளுவாய்

காத்திரம் நித்யமென வெண்ணலா காஜீவன்
கட்டுமொரு கூடதாகும்
காலம்வந்தால்விட்டு விட்டோடு மாதலால்
கருதினே னுன்பாதமே
சாத்திரங் கற்றதிலே தொண்டர்க்குத் தொண்டெனச்
சாற்றிடும் நான்சிறுவனே
தடப்பொழில்கள் பலசூழ்ந்த கடப்பைவளர் பரமாம்ஸ
சச்சிதா நந்த குருவே.

---

## 17. ஏமாந்துனேசெலியா.

காம்போதி] பல்லவி. ஆதி

வேதாந்தசாகரமே நம்
வினைதீர மனதாற வினிதூற வருளும்வரமே ( )

அநுபல்லவி.

நாதாந்தமாய்நின்ற நண்ணும்பவங்கொன்ற
போதாந்தமாகின்ற
புத்தமுத மொத்தமொழி
பத்தரிட மெத்தமொழி (வே)

சரணம்.

வல்லபிறவியெனும் வாரிதியைக்கடந்து
வளருங்கரையிலேறி மாறுச்சுகமடைந்து
அல்லலெனுமுலக அவஸ்தைகளைக்கடிந்து
அற்புத முற்றுநி றுத்திபு லத்தினை
நற்படி கத்தினை யொத்துச விப்பற
அஞ்சாப்பவமது பஞ்சாய்ப்படவிழை
பஞ்சாக்ஷரமெனு மந்த்ரோத்தமமொழி

ஆகுமெத்த மாரகஸ்ய காயசுத்தி யேபடுத்த
பாகமிக்க வாரணச்சு லோகமொட்டி யேயுரைத்த
ஆதிபவநாச
ஜோதிதவநேச
நீதிசிவதாச
நீதிலுபதேச
அதிசயமிகமுன மெடுஜனனமிதென
பதியினிலருளின மதிநிருவியகன
அகக்காந்திபெறு மிகச்சாந்தமொடு
சுகக்காஞ்சிதனி லுதித்தோங்கிதினம்
ஆடுமெளி வீழுமல ரின்பொழிற்கள்சூழும்
மாடநிறைவீதிமலி யுங்கடப்பை வாழும்
அப்பாவு ளைப்பார்சி
றப்பாகு மிப்பாரில்
பொற்பாதம் தப்பாத
ளிப்பாய்வி ழிப்பாரும்
அந்தமிகுஞானமிர்த சாரநிதி மாதுரியச்
சந்தமொழி வேலாயுதசாமி பணிசாதுரியே (வே)

---

## 18. அரனார்திருமாநுதலின்.

சங்கராபரணம்] பல்லவி ரூபகம்

திருமாதவயோகசுகுண சீரியமறைவாரிதியே
சித்தந்தெளிந்தபரி சுத்தம் பொலிந்தகுருநிதியே (தி)

அநுபல்லவி.

அருமாமறைநாலையுமே அறிந்திடுபெருந்தகைபொருந்திடும்
அகட்பற்றுதனை யுகப்பெற்றுபா
சுகப்பற்றுதனை மிகப்பெற்றுதிரமொடுவளர் (தி)

வணங்குதொண்டர்க்கருள்தர விணங்குசிந்தைப்
பொலிவொடு
வந்தண்டும் பண்பெங்கும்
பொங்குந்துங் கம்பெருநய
மாசற்ற வாலைப்பி ராயத்தி லேதொட்டு யோகத்தி லாசித்து
மங்காதெங்குமி லங்காநின்றிட
கொண்டாடும்புகழ் நின்றேதுன்றிட
மன்ற லம்ப தம்பொ ருந்தி
வளர்வுறு விதரண நயகுண (தி)
வாசியின்வேகமடங்கிட ரேசக பூரக கும்பகம்
மந்திரத்து டன்பழக்கி
சிந்தையைக்க டிந்தடக்கி
வன்மைத்தரு சின்முத்திரை
யின்மெத்தவு நன்மைத்தவ
வாலாயதி யானத்தமிழ்
வேலாயுத சாமித்தொழும்
வரஞ்சானு மருஞ்சானு
பரஞ்ஜோதி சாதவிரத (தி)

---

## 19. கௌனமிலியாதேரெ.

அரைவிருத்தம்.

கச்சிமாநகருநித்துக் கடப்பைவாழ் பரமஹம்ஸ
சச்சிதாநந்த யோகத் தத்துவப்ரம்மஞானி

பாட்டு.

தாமரைப்பூந்துணையடிகள் தனைத்துதிப்பாய்மனமே சமு
சாரமதைவிலக்கமதி தந்திடுஞ்சாதனமே இந்த
தாரணிசுகதினமே மிகச்

சாற்றலாஞ்சொப்பனமே உடல்
ஜலத்திலெழும்புங்குமிழிபோலந் தானறிவாய்முனமே ()

அரைவிருத்தம்.

எவ்விதத்தொழிலில்பாக்கி யிருக்கினும் ப்ராணன்போகும்
அவ்விதம்விலக்கலாமோ அறிகுவாய்பிரத்தியட்சம்

பாட்டு

ஆதலினால்நாட்களையனி யாயமாய்த்தள்ளாதே என்றும்
அரிவையரைக்கண்டவுடன் ஆனந்தங்கொள்ளாதே அது
அனைத்தும் பொல்லாச்சூதே மிக
அவத்தைவருந்தப்பாதே வீணில்
அழிந்திடிலோவிந்தஜன்மம் அப்புறம்வாராதே ()

அரைவிருத்தம்.

நேத்திரம்தன்னில்காணும் நிகிலமுமுரைக்கிற்கொஞ்ச
மாத்திரமென்றெண்ணாமல் மயங்கியேயழிந்திடாதே

பாட்டு.

மாயவாழ்க்கைதனைவிடுத்து மற்றொன்றைவிரும்பு திரு
மதுரச்சந்தவேலாயுதன் வார்த்தையைநீ நம்பு இது
மனமினிக்குங்கரும்பு மிக
வந்திடும்பெருந் தெம்பு அதி
மாக்ஷியுடைய மோக்ஷமடைய வழிகாட்டுங்கொம்பு ()

---

## 20. சோமசேகரனருளும்

இந்துஸ்தான்தோடி] கண்ணிகள். ஏகம்

ஞானசூர்யவாசி யோகமூர்த்திமூர்த்தி எந்த
நாளுமின்பவாரிமூழ்கு நேர்த்திநேர்த்தி உயர்
வானமேவுமாடகூட மாளிகைத்தெருக்கடப்பை
வளருகின்றதெங்குமிக்கக்கீர்த்திகீர்த்தி (ஞா)

மும்மலங்களையொழித்த ஜோதிஜோதி கொண்டார்
முக்கியம்மனத்தைக்கொல்லும் நீதிநீதி மிக்க
நன்மையாக்கவேண்டிமெத்த ரகசியத்தைவெளியுரைத்து
நாட்டிடும் அருள்விளங்கும் ஆதிஆதி (ஞா)

மானஸவிசேஷபூஜை செய்துசெய்து தினம்
வழக்கமாகவன்புமாரி பெய்துபெய்து மிகத்
தானெனும்பொருள்தெரிந்து தத்துவங்கள் கண்டறிந்து
சலனமற்றூர் மாயைதன்னைக் கொய்துகொய்து (ஞா)

சந்தமாரும் செந்தமிழைப் பாடும்பாடும் சிவ
தாசனும் வேலாயுதன் கொண்டாடும் நாடும் தவ
சொந்தரானநித்தியவா னந்தர்பாதமேதுதிக்கின்
தொல்லையானவினைகளெல்லாம் ஓடும்ஓடும் (ஞா)

---

## 21. பூபாலர்மெச்சிடும் பூமான்.

சேஞ்சுருட்டி] பல்லவி. ஆதி

வேதாந்தசாரவைபோகி
நாதாந்ததீரமெய்யோகி (வே)

அநுபல்லவிச்சந்தம்

விகசித மிகுமன
சுகநய சுகுண (வே)
வித்தக தவ
நித்திய சிவசரண (வே)
வெம்ப வங்க
ளைந்தி லங்குதுங்க (வே)
மிஞ்சுந் துங்கந்
தங்குந் தங்க (வே)

சரணம்.

தீதாம்மேதினி பந்தம் எனத்
தீர்த்தவராகும னந்தம் சிவன்
பாதாம்புயமது சொந்தம் மிகப்
படைத்தவர்நித்யா னந்தம் (வே)

தொஹையரு.

பனிரெண்டுவயதிலேயே பழகினவர்சிந்தை
இனிவாகநிறுத்துதற்கு இயம்பிடிலோவிந்தை

பாட்டு.

பத்தரைமாற்றின் தங்கமெனும்படி
இத்தரைபோற்றும் துங்கமிகுந்த (வே)

சரணத்தொடர்.

வஞ்சகவாசையை விட்ட ஓம்
மந்திரவிதைதனை நட்ட பெரும்
சஞ்சிதங்களையொழித்திட்ட பர
சற்குருபாதங்கும் பிட்ட (வே)

தொஹையரு.

தசவிதமானநாதம் தான்கண்ட சீமான்
நிசமிதுவென்றுசிந்தை நிச்சயித்தபூமான்

பாட்டு

சந்தமுழங்குந் தமிழ்வேலாயுதன்
முந்திவணங்கும் பரமாதார (வே)

---

## 22. மயிலேறிவாவேலனே.

செஞ்சுருட்டி] பல்லவி. ஆதி

பரிபூரணனந்தமே
பரமஹம்ஸர் பாதம் வாமிகும்பாசாதம் நற் (ப)

தோஹையரு.

பந்தவாரிதிதன்னில் பட்டுக்கிடந்து தினம்
பரிதாபமே
விந்தையாய்ப்படுமாந்தர் மனவிருளைக் கொய்ஞான
மெய்த்தீபமே

அநுபல்லவி.

விரிபூதலத்திலுற்ற வினைகளெல்லாமகற்ற
வித்தகப்பரம சற்குருப்பெயரின்
உத்தமத்துடனு நித்தமுத்தியருள் (ப)

தோஹையரு.

மதிகேடடைந்துள்ளமூடர்கள் பிழைத்திடும்
வாறுபூமேல்
சதுர்வேதமேயுருக் கொண்டிங்குவந்ததெனச்
சாற்றலாமே

அநுபல்லவித்தொடர்.

சந்தநல்வேலாயுதன் செந்தமிழினற்புதன்
சந்தத முந்தொழு தின்பமி குந்துசு
கந்தனை முந்துபொ ருந்தும ருந்தவ (ப)

---

## 23. கோலாகலலீலையின்பமே பின்மகுடம்.

தன்யாஸ்] பல்லவி. ரூபகம்

தேஜோன்மயநித்யானந்தராம் திகழுஞ்சுகந்தராம் ()
செந்தமிழ்மொழிவேலாயுதன்
வந்தனைசெயு மேலாகிய (தே)
நித்திக்கு முத்திக்கு வித்தான
பத்திக்கு புத்திக்கு சத்தான (தே)

அநுபல்லவி.

பூஜாவிதி யாகிய மாதவ சாதன (தே)

சரணங்கள்.

பத்மாசனம் படவுட்கார்ந்து
பற்றியேசின்முத்திரைதேர்ந்து
தத்வாதார சாரமோர்ந்து
தவமுயன்று உடல்நிமிர்ந்து
விழியிரண்டின் நடுவறிந்து
தாக்கிப்பெரு நோக்கத்தினை
நீக்கித்துயர் ஊக்கத்தொடு
சாசனமாகுபெருஞ்சுக நேசமதேமிகவும்புக
ரேசகபூரககும்பக மேசெயுமா * பரநம்பக (தே)
சோத்திராதி புலன்கள்வென்று
தொடருமனத்தைச் சுட்டுக்கொன்று
வாத்தியதச நாதநன்று
மனமகிழ்ந்து மிகவுணர்ந்து
கனலில்வெந்த வமுதமுண்டு
மாக்ஷிப்பெரு மோக்ஷப்பத
சூக்ஷித்தெரி காக்ஷிக்கொள
மறந்துமெய்சமாதிநிலை யறிந்துறைவிவேகமது
சிறந்துமேசுபோதமடை திறந்துபாய்குணுதிபதி(தே)

---

## 24. துலங்குசெம்பொன்.

சேஞ்சுருட்டி] கண்ணிகள். ஆதி

தவம்புரிந்துண்மைப்பொருள்கண்டவர் தாரணியிற்
[கடப்பை

---

* பரம்-நம்பு-அகம் + சிவத்தை-நம்பும்-மனம்.

சச்சிதாநந்தயோகியே உலகமெங்கும்
மெச்சும்பெறுவிவேகியே விரி
தாரணிக்குளதி ரகஸியமானதை
பூரணத்தில்மிக வெளியினிலோதிய
சத்துவபோதத்யாகியே சந்தேகமற்ற
தத்துவஞானபோகியே (த)

பவம்பெருஞ்சஞ்சிதவினையற்றிட பாரவஷ்டாங்கயோகம்
பழகித்தெரிந்தஜோதியே பத்மாசன
வழகிற்சிறந்த நீதியே மனம்
பக்குவமாகிட முக்கிபமானஸ
நற்கனபூஜையி யற்றியசாதன
பண்புபொருந்தும் ஆதியே வைராக்கியத்தில்
உண்டுபலப்ராக் யாதியே (த)

சிவந்தெழும்பும்யோகாக்கினியது சிரசில்படக்கரைந்து
சிந்தும் அமிர்தபானமே தினமுஞ்செய்து
சொந்தமடைந்தார் ஞானமே சந்தச்
செந்தமிழ்வேலா யுதசாமித்தினம்
சிந்தையில்பாமா லையையோதித் தொழும்
சித்தநிாமலநேசியே முற்றுந்துறந்த
வித்தகநற்சந்யாசியே

---

## 25. பாலராமனையனே.

தோடி] பல்லவி. ரூபகம்

மிக்கமடநெஞ்சமே மிக
மெய்யெனநம்பாதே பொய்யேப்பஞ்சமே (மி)
வீணிற்றிரி யாதேவினை
பேணிப்புரி யாதே பவ (மி)

விரும்பியுல குறும்பொருளை
யருங்கதியை யிழந்துவிடும் (மி)
விளக்கைக்க ரம்பிடித்துக்
கிணற்றில்வி ழுந்திறக்கும் (மி)
வேதமுத லாகிநடு வாகிமுடி
வாகிநிறை வானபொரு ளேயறிவை (மி)

அநுபல்லவி.

முக்கியமான முழுப்பொருள் தன்னை
முதலில்கண்டுக்கொண்டு செய்குவாய்பின்னே
தக்கவுன்காரியம் சாங்கமாய்ச்சொன்னேன்
தப்பாதிம் மொழிகேட்டுபி
ழைப்பாயுன் மதமென்னே (மி)

பல்லவித்தொடர்.

அல்லல்தனைக்கொள்ளாதே கொண்டு
அழிந்துபோகாதேநாள் கழிந்துசாகாதேபாழ் (அ)

அநுபல்லவித்தொடர்.

கல்விலும்செம்பிலும் கடவுள்தானேது
கண்காக்ஷிக்குச்செய்தார் காசினிமீது
சொல்லுகிறேனிது முற்றிலுஞ்சூது
சுருக்கியறி யுன்னுள்ளே
யிருக்கிறது தப்பாது (மி)

பல்லவித்தொடர்.

சற்குருவைப்போற்றுவாய் மதூச்
சந்தவேலாயுதன் செந்தமிழ்சாற்றுவாய் (ச)

அநுபல்லவித்தொடர்.

கற்கண்டெனும்பர கதியிணைநாடு
கடப்பையோகீஸ்வரர் கருணையைத்தேடு
அற்பமனைவாழ்க்கை யைத்தள்ளிப்போடு

ஆனந்தப் பெருங்கடலி
லேநின்றுக் கூத்தாடு (மி)

---

## 26. ஆசிரியவிருத்தம்.

பொல்லாத திரைவீசு வாரிதி கடந்திடப்
 * புணைபோல வும்பெருத்த
புகலறும் பசிதா னடங்கிடப் பொன்னுலகப்
 புத்தமுத மேபோலவும்
செல்லாத விருள்மூண்ட கானகந் தாண்டத்
 தெரிந்ததுணை யைப்போலவும்
தீராதுமேன்மேலு மதிகமாம் நோய்நீங்கச்
 சித்தௌஷதம்போலவும்
வெல்லாத சிங்கத்தை வெல்லவே வளர்சத்தி
 வேலாயுதம்போலவும்
வினைமாந்தர் கண்டுய்ய வொளிர்ஜீவ ப்ரம்மைக்ய
 வேதாந்த ரகஸியத்தைச்
சல்லாப முடனுரைத் திட்டபர மாசார்யத்
 தவபோக சிவயோகியே
தடப்பொழில்கள் பலசூழ்ந்தகடப்பைவளர் பரமாம்ஸ
 சச்சிதா நந்த குருவே.

---

## 27. செந்தின்மா நகரந்தனில்

செஞ்சுருட்டி] கண்ணிகள். சாப்பு

சச்சிதாநந்த யோகேந்த்ர காரண
 சற்குருபாதத்தைப் போற்று அவர்
 நற்பெருங்கீர்த்தியைச் சாற்று மெய்யாய்
 தங்குமிச்சக வாழ்வுசொப்பன
 மென்பதிற்றடை யாதிருப்பது

---

* புணை-தெப்பம்.

சங்கமே கண்முன் வாழ்ந்தோரிறந்தார்கள்
சற்றும்நீயோசியா வண்ணமே யாது
குற்றம்பொருந்துமென் எண்ணமே (ச)
மெச்சியேவரும் மனைவியும்மக்களும்
வீடுதோட்டங்களும் ஆஸ்தியே யதும்
தேடும்பொருள்களும் நாஸ்தியே நாளை
வீங்கிடாமுனம் நான்குபேர்களும்
ஓங்கிதோள்மிசை தாங்கியேசெல
மிக்கவே வுந்தன் கூடவெதுவரும்
விளம்பிடுகாண்பேனுன்யூகமே சுகம்
வளர்ந்ததுபோதுமுன் ஸ்நேகமே (ச)
நல்லமாதிரி பெண்களைக்கண்டாலே
நயிலுமுன்நாடுகின்றாயே வரும்
கவலைதனைத்தெரி யாயே மிக
நகைப்புக்கிட மிதைச்சொற்றிடில்
மிகுத்துத்தெரி மடப்புத்தியே
நம்பினுலிந்த நானிலவாழ்க்கையை
நாசமேயாகுவா யீது கண்டும்
மோசமடைதல்த காது (ச)
வல்லமாயையின் சம்மந்தத்தால்மெய்யை
வழுவித்துயரிற்சேராதே சொன்னேன்
பழுதையைப்பாம்பென்றோதே பல
வற்றையுற்றுந சிந்திடாதழி
வற்றமெய்ப்பொருள் கண்டிடாயினி
வற்றிடாச்சந்த மதூவேலாயுதன்
வாக்கியமேதகும் சாக்ஷி இதை
நோக்கியறிந்திடு சூக்ஷி (ச)

---

## 28. என்னகேள்விமுறை.

பிலஹரி] பல்லவி. ரூபகம்

ராஜயோகமே எந்த
நாளும்நலந்தரு மேசுபாகமே (ரா)

அநுபல்லவி.

பூஜா விதியி தேசாதனையி லேசாதாரண (ரா)

சரணங்கள்.

வித்யாசமற்றிடும் நித்யானந்தம்பெறச்
சித்தாசனமாய்ச்சின் முத்ராஸ்த்தத்துடனே
மேலாகச்செயுங் கோலாகலவி சாலாதிசய (ரா)
மந்திரமான "ஸோ ஹம்" தனில்த்யானமாம்
தந்திரமோனயோ கந்திரமானதீ
வாட்டும்பவத்தை யோட்டும்அவத்தைக்கூட்டும்சிவத்தை()
பூரகரேசகத் தோடுபொருந்தியே
நேரகத்துள்ளே நினைந்துதிருந்தியே
போற்றும்ஜனன மாற்றும்மனனந் தோற்றும்சுஜன (ரா)
கானந்தருஞ்சந்த ஞானவேலாயுதன்
த்யானந்தரும்சச்சி தானந்தயோகீசர்
காட்டும் ஞானப்பா லூட்டும் மோனத்தில் பூட்டும்
மெஞ்ஞான (ரா)

---

## 29. ஏமிமாயமு,

காம்போதி] பல்லவி ரூபகம்

உண்மையானவேதநூலை யுணர்ந்தசந்யாசி
உரைக்குமு பந்யாசி (உ)
உத்தமதவ மெத்தவுமிழை
தத்துவபரி சுத்தவிரத (உ)

ஒடுக்கி மனத்தை யகத்தி
லடக்கி சுகத்தி லிருக்கும் (உ)
உடைப்படா பந்தமதனி
னிடைப்படா விஞ்சையருளும் (உ)
உலகத்தவர் கதியைப்பெற
திலகத்திரு வுருவுற்றிடும் (உ)

அநுபல்லவி.

திண்மையான சிவத்தின்நிலையைத்
தேர்ந்த ஓர்ந்த சார்ந்த மெய்ஞ்ஞானி (உ)

சரணங்கள்.

என்றுமழியாத வின்பத்திலோயாத
இச்சையுறுவோருக் கின்றியமையாத
நன்றுவேதாந்த ரகசியமாம்போத
நாயகநூலை மொழிந்தவர்
தூயசமாதி யறிந்தவர் (உ)
நாவல்கதைகளை நாம்தள்ளிப்போடுவோம்
நலமிகுமந்நூலை நாளுமேநாடுவோம்
பாவலன்வேலாயு தன்கவிபாடுவோம்
பற்றற்ற மனம்பெறுவோம்
சற்றுற்று நினைந்தறிவோம் (உ)

30. ஆசிரியவிருத்தம்.

சஞ்சிதம் ப்ராரத்வ மாகாம்ய மென்றுமிகச்
சாற்றிடும் வினைகள்மூன்றும்
தப்பாதொழிந் துவிடி லப்போதலோபிறவி
தானுந் தொலைந்து போகும்
வஞ்சக மிகுந்தமன முள்ளவரை யிற்பிறவி
வாரா தொழிந்திடாதே

மனமற்ற விடமாகு மழிவற்ற சுகமென
வழுத்துவது மிகவுண்மையே
மிஞ்சிவெளி யோடித்திரிந்திடு மனத்தினை
வீக்கி சூட்சுமமதாக்கி
மிக்கவதையுஞ்சூன்ய மாக்கியே பேரின்ப
வீடடையு மார்க்க மருள்வாய்
தஞ்சமென வுந்தனிரு செஞ்சர ணடைந்தனன்
தமியேனும் நான்சிறுவனே
தடப்பொழில்கள்பலசூழ்ந்த கடப்பைவளர் பரமாம்ஸ
சச்சிதா நந்த குருவே.

---

## 31. ஷாதுமான்.

இந்துஸ்தான்தோடி]    பல்லவி    ஏகம்

தேகமே ஆகுஞ்சங் தேகமே (தே)

அநுபல்லவி.

தினமேமிக நிலையாமென
நினையேல்மட மனமேகன (தே)

சரணங்கள்.

நாகமதையணிந்த நாதன்பதமதையே
நம்பு நம்பு நம்பு நம்பு
நாட்டஞ்சுழற்றிக் காட்டுங்கொங்கையர்
நோட்டந்தூரத்தித் தேட்டங்கொண்டிடு (தே)
ஊனும் நரம்பெலும்பும் உதிரம்மலநிறைந்த
உடலம் உடலம் உடலம் உடலம் அதில்
உலவித்திரியும் காற்றின்மூச்சு
வெளியிற்பிரியின் ஆட்டம்போச்சு (தே)
கூடும்மனையுறவோர் குழந்தைகளும்சந்தைக்
கூட்டம் கூட்டம் கூட்டம் கூட்டம் அந்த

குறிப்பையுரைக்கி னுலகினியல்பு
சிரிப்பைவிளைக்கு மதிகமதிகம் (தே)
மதுரமிகுஞ்சந்த மலியும் வேலாயுதனின்
வாக்கு வாக்கு வாக்கு வாக்கு இதை
மதிக்குளிருத்தி மிகுத்துபொருத்தி
இதத்தையருத்தி படுத்துவிருத்தி (தே)

---

## 32. இன்னமுங்கோபமா

பிலஹரி] பல்லவி. ரூபகம்

பொய்யானகாயம் உயிர்
போகும்போதெவர் செய்வார்சகாயம் (பொ)

அநுபல்லவி.

மெய்யா யெண்ணியே நையாதிந்தநாள்
செய்யாயுபாயம் (பொ)

சரணங்கள்.

ஆதாரமாறில் அடைந்துவருங்காற்று
அனைத்துமுடிந்தா லதுநமக்குக்கூற்று
மேதாவியாம்பர வெளியிலதையேற்று
மென்மையாம்ஜீவனை வேண்டியிடம்மாற்று
விந்தைத்தரு மந்தக்கா
ணங்கெட்டிட தண்டித்திடு
சிந்தைத்தனை சொந்தப்பட
மிஞ்சித்தினம் கண்டித்திடு
வீணாய்ப்போகாதே வாணுளேகிடும் காணாய்மெத்
தவும் (பொ)
மண்பெண்பொன்னுசை மயக்கங்கள்பொல்லாது
வஞ்சமனமொரு வழியினில்நில்லாது

சண்டனெறியும் பாசந்தன்னைவெல்லாது
தகைமையுஞ்செல்வச் சம்பத்துகள்செல்லாது
சந்தச்செந் தமிழ்வேலா
யுதன்றொழும் சச்சிதா
னந்தப்பண் பவர்நேராய்
நவின்றிடும் உச்சித
சந்தேகமில்லாச் செந்தேனுண்டுபொ ருந்தேபேரின்பம்()

---

மங்களம்.

## 33. கல்யாணம்செய்துவையுமே.

ப்யாக்] பல்லவி. ஆதி

சம்பூர்ணஜெயமங்களம் தினம்
தருநய கனசுப (ச)

அநுபல்லவி.

லம்போதாகண நாயகனடிக்கும்
நந்தொலிசாகர நடுவறும்படிக்கும்
விண்பாலிருந்துமே வீழ்ந்திடுமழைக்கும்
வித்தகயோகிகள் மிகுதவக்களைக்கும் (ச)
கயலினந்தாவியே கமுகினிற்குதிக்கும்
கழனிகள்சூழ்ந்திடுங் கடப்பையம்பதிக்கும்
ஜயமிகுந்துயவே காம்பரநிதிக்கும்
சச்சிதானந்த மா தவவாரிதிக்கும் (ச)
சந்ததமேபா தாசர்கள்தனக்கும்
தங்கிடுமதுரிதச் சந்தங்கள்தொனிக்கும்
செந்தமிழ்வேலா யுதன்கவிக்கனிக்கும்
சென்னையின்ராஜகோ பாலகம்பெனிக்கும் (ச)

---

34. வாழி விருத்தம்.

வேதமொரு நான்கதுவு மிகவே வாழி
விரிஜீவ ப்ரம்மைக்ய மெய்ந்நூல் தானும்
ஏதமறு மிந்நூலு மென்றும் வாழி
இயற்றினோர் படித்தவர்களியல்பாய் வாழி
நீதமுடன் கேட்டவர்கள் நெறிநின்றோர்கள்
நிலையான சுகமடைந்து நிதமும் வாழி
கோதறவே யச்சியற்றி முடித்த ராஜ
கோபால கம்பெனியும் வாழி மாதோ

---

ஸச்சிதானந்தத் தமிழ்ப்பாமாலை
சம்பூர்ணம்.